# OME.

# A GLANCE AT INDIA

## PAST, PRESENT & FUTURE.

A lecture delivered, upon invitation, before large audiences of Natives and Europeans at Amritsar, Lahore, Mooltan, Cawnpore, Benares (before H. H. The Maharajah), and Allahabad.

BY

COLONEL HENRY S. OLCOTT

PRESIDENT OF

THE THEOSOPHICAL SOCIETY

*TRANSLATED FREELY BY*

S. SUNDARUM IYER.

KARIKAL

Printed at the Mouhamadoo Samadanee Press.

Price 2 Annas.

1882.

உ

# விளம்பரம்.

இந்தப்புத்தகம் வேண்டியவர்கள்-நாகபட்டினம் தென் இந்தியா றெயில்வே சிவ் ஆடிட்டர் ஆபிஸில கிளார்க்குவேலைபார்க்கிற (பாப்புப்பிள்ளை) இடம் இப்புத்தகத்தின் விலை—அணா இரண்டும் தபாற்கூலியு மனுப்பினால் புத்தகம் பெற்றுக்கொள்ளலாம்.

பத்துப்புத்தகந் தொகையாக வாங்குகிறவர்கட்கிரண்டுபுத்தகம் இனாமாகக் கொடுக்கப்படும்.

இங்ஙனம்:

பாப்புப்பிள்ளை,

நாகபட்டினம்.

## முகவுரை.

கீழ்வரும் பிரசங்கங்களின் கர்த்தாவானவர் ஹென்றி எஸ். ஆல்க்காட் (Colonel Henry. S. Olcott) என்றநாமமுடைய ஒரு அமெரிக்கா தேசத்து துரை. இவர் "தியஸாபிகல்ஸொஸைட்டி"க்குத் தலைவர். "தியசாபிகல்சொசைட்டி" என்பதற்கு "தத்வஞானசபை" என்று பொருள். இச்சபை 1875-ல் அமெரிக்காவிலுள்ள யூனைட்டெட் ஸ்டேட்ஸ் என்ற தேசத்தின் சிரேஷ்டநகரமாகியநியூயார்க்கில் மேலேசொலிய துரையவர்களாலும், ஹெலியோனு. பி. ப்ளாவட்ஸ்கி (Countess Heleona. P. Blavatsky) என்ற துரைச்சானியாலும் ஸ்தாபிக்கப்பட்டது. இவ்விருவரில் ஆல்க்காட் துரையானவர் யூனைட்டெட் ஸ்டேட்ஸில் வைக்கில் (Barrister) ஆகவும், உபசேனாபதி (Colone) ஆகவும், பட்டாளத்தில் பிரதான விசாரணைக்காரர் (Special Commissioner of the War Department) ஆகவும், தேசத்து உத்தரவாதசங்கத்துக்குக் காரியக்காரர் (Secretary to the National Insurance Convention) ஆகவும், கிருஷிவிஷயத்துக்கு முக்கியவிசாரணைக்கர்த்தா (Chief Commissioner of Agriculture ஆகவும், இன்னும் சில மிகவுயர்ந்த அலுவல்களில்உத்தியோகஸ்தராகவும், யாருமெச்சும்படியான திறமை, சத்தியம், ஊக்கம், புத்தியுக்தியோடு வேலைபார்த்துமகாஐஸ்வரியத்தையும், பிரதாபத்தையும், வாய்ச்சாலகத்தையு மடைந்திருக்கின்றார். சுருக்கிச்சொல்லில், இவர் அமெரிக்காதேசத்து பிரதானிகளுக்குள் ஒருவர். இப்புண்ணியவாளனுடைய பெருமையைக்குறைவறக்கூறுவது எளிதோ? மற்றொருவராகிய ப்ளாவட்ஸ்கிஅம்மாள் ருஷியாதேசத்தில் ஒருபிரபுவம்சத்தில் ஜெனி

த்தவள். பட்டப்பிரபு ஒருவரை மணம்புரிந்ததுபற்றி, இவளுக்கு ப்ளாவட்ஸ்கி பிரபு பத்தினியென்ற நாமம் வழங்குவதாயிற்று. இவ்வித்தமி என்னவோ ஜென்மாந்தர வாசனையையிட்டு, இளவயதிலேயே பரபாசம்பந்தமுள்ள உலகவிலாக்கிய சௌக்கியங்களையெல்லா மறந்து துறவியாகி நம்ஆரியா வர்த்தாவுக்குவந்து ஒருமுனீஸ்வரரை யண்டித் தொண்டுசெய்ததினால் அவரதுகாருணை பெற்று, அவரைக்குருவாக அடைந்தாள், அவர் இவளை யோகாப்யாசம் பண்ணச்செய்து, அஷ்டாங்க யோகங்களில சித்திபெறச்செய்வித்தார். இந்தயோகியானவள் ஐரோப்பா, அமெரிக்கா, இந்தியாமுதலிய தேசங்களில் அநேகவெள்ளைக்காரருக்கும், சுதேசிகளுக்கு முன்பாக எவரையும் ஸ்தம்பிக்கச்செய்யக்கூடிய மகா அற்புதங்கள் செய்திருப்பதை உலகமெல்லா மறியும். அவள் சிஷிகளின் மூலமாய் நமது வேதசாஸ்திரங்களைக் கசடறக் கற்று, மனைடி போகத்தெளிந்து, "தத்வரகஸ்யவிளக்கம்" (Isis Unveiled) என்ற பெரிய அரிதான கிரந்தம் ஒன்றை எழுதியிருக்கின்றாள். இவளுக்குப் பதினைந்து பாஷைகள் வரும். இச்சீமாட்டியின் போதனையினாற்றான் கர்னல் ஆல்க்காட்டுதுரை ஆத்மஞானமடைந்து இவ்வுலகப் பொய்வாழ்க்கையை விட்டுத் துறந்து இத்தேசத்தில் அவளுடன் குடியமர்ந்துவிட்டார். இவர்களிருவரும் மாம்ஸபக்ஷணை மதுபானாதிகளைக் கனவிலுங் கையாடுகிறதில்லை. கல்வி, சாஸ்திரம், ஞான முதலியவைகளில் இவர்களடைந்திருக்கும் தேர்ச்சிக்கு எல்லைக் கிடையாது. ஐரோப்பிய மார்க்கங்களையும் சாஸ்திரங்களையும் வெகுவாய் வாசித்தாராய்ந்தும், பயிரிளழ யெங்கிலும் ஞான ஒளி வீசாததினால் அதிர்ப்தியடைந்து, சமஸ்கிருத வேதசாஸ்திரங்களைப் பார்வையிட்டு, அவைகளினால் ஞானக்கண் திறக்கப் பட்டிருக்கிறார்கள். இந்தவித்வாம்ஸர்கள் தாங்கள் மாத்திரம்

ஆரிய சாஸ்திரங்கள் வெளியிடும் ஞானரகஸ்யங்களை யறிந்து கொண்டாற் போதாதென்றெண்ணி, பொருட்செலவு, சரீரசிரமம், சௌகரியமிவை முதலியவைகளைப் பாராட்டாமல் பூமியிலுள்ளோர் யாவருக்கும் அவைகளைப்பிரசங்கம்பண்ணிக்கொண்டுவருகிறார்கள். இவர்களுடைய போதனையின் பேரில் வெள்ளைக்காரர்களுக்குள் பிரபல்யமடைந்த அநேகவித்வான்களும் சாஸ்திரிகளும் தங்கள் கிரிஸ்துமதத்தை விட்டு, நமது வேதாந்தமார்க்கத்தை யநுசரிக்கத் துவக்கிவிட்டார்கள். தியாசாபிகல் சொசைட்டியின் கீர்த்தியும், செல்வாக்கும், உலகமெங்கும் வியாபித்துவிட்டது. வட அமெரிகா, தென்அமெரிகா, மெக்ஸிகோ, மேல இந்தியதீவுகள், இங்கிலாண்டு, ஸ்காட்லண்டு, ஐர்லண்டு, பிரான்ஸ், ஜெர்மனி, ஹங்கரி, பெல்ஜியம, ஹாலண்டு, ஆஸ்ட்ரியா, ருஷ்யா, ஸ்பெயின், இட்டலி, ட்டர்கி, கிரீஸ், சைப்ரஸ், அஸ்ட்ரேலியா, இஜிப்து, ஸிரியா, இந்தியா, இலங்கை, சயாம், பர்மா, ஜாவா, ஜப்பான், முதலிய தேசங்களில் அநேகம்பேர்கள் இதைச்சேர்ந்து, அங்கங்கே கிளைச்சபைகளேற்படுத்தியிருக்கிறார்கள். தவிரவும், கௌரியதிகளும், வித்தாதிகளும் இத்துடன் சம்பந்தப்பட்டிருப்பதனால். நமது அசட்டையினாலும், தேசாபிமானமின்மையினாலும், பாதிரிகள் இன்றும் ஐரோப்பிய சாஸ்திரிகளின்பிரதிகூலமான முயற்சிகளினாலும் பிரகாசமின்றி மங்கிக் கறுண்டுபோயிருக்கும் நம்வேதசாஸ்திரங்களை பிரளயகால சூரியனைப்போல காந்திவீசிஜொலிக்கும்படி செய்ய முயல்வதுமன்னியில், வறுமையினால் விளையும் கொடிய கஷ்டங்கள் நிறைந்த நிலைமையினின்று நம்மைத் தாணஞ்செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச்செய்து, இவ்விஷயத்தில் தங்கள் ஜீவனையும் பரித்தியாகஞ்செய்யத்தயாராயிருக்கும் இப்புண்ணிய ஆத்மாக்களுக்கு நாமும், நமது சந்ததியாரும் என்றென்

றைக்கும், கடன்பட்டவர்களாகவும், நன்றியறிதலுள்ளவர்களாயிருக்கவேண்டியவர்களாகவும், நம்மில் சுதேசாபிமானமுள்ள ஆரியர் யாவரும் அச்சபையைச்சேர்ந்து அவர்களுக்கு உத்சாகங்கொடுக்கக் கடமைப்பட்டவர்களாகவும்,இருக்கிறோம். இந்துக்களே! யாதுகாரணம்பற்றி நீங்கள் ஆங்கிலேய பாஷையை யப்யசித்ததினால் சகல தேசத்து வித்வாம்சாளும் புகழ்ந்து ஒப்புக்கொண்டு கற்கின்ற நமது வேதங்களை நிந்தித்து, கழித்துக்கிழித்து குப்பைத்தொட்டியில் எறிகின்றீர்கள்? அந்நிய தேசங்களில் விசாலமாய்க் கற்றுணர்ந்து தேர்ந்திருப்பவர்களிலநேகர் தங்கள் மார்க்கசாஸ்திரங்களைப்போக்கி, நம்மவர்களாகிக்கொண்டுவர, உங்களுக்கேன் அன்னிய சாஸ்திர மதங்களின்பேரில்மோகம்? ஆரியர்களே! ஐயோ! கண்விழியுங்கள்,பின்வரும்பிரசங்கங்களைவாசித்து அம்மோகத்தை ஒழியுங்கள்; அவைகளின் சாரத்தைக் கிரகித்து தேசாபிமானத்தில் தழையுங்கள்; நம்வேதத்தால் ஞானமடைந்து பிரம்மானந்தம் பொழியுங்கள். ஐரோப்பியர் இந்துக்களாகிக்கொண்டுவர, இந்துக்கள் ஐரோப்பியராகப் பார்க்கிறார்கள்! ஆ! ஆதி ஆரியாவர்த்தமே!கல்வி, கலை சாஸ்திரங்களின் தாயே! ஞானத்தின்கண்ணே!. இதுவோ உன்கெதி.

ஆச்சரியம்! ஆச்சரியம்!! அத்யாச்சரியம்!!!

# ஓம்.

"தியஸாபிகல் சொஸைட்டி" யின் தலைவராகிய மகா கனந்தங்கிய கர்னெல் ஹென்றி. எஸ். ஆல்காட்துரையவர்கள் லாகோர், அம்ரிட்சர், மூல்ட்டான், காசி, அலகபாத்முதலிய விடங்களில, இந்துக்கள், ஐரோப்பியர் அடங்கிய பெரிய சபைகளுக்கு முன்பாக, "இந்துதேசத்தின் சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலங்களின் நிலைமைகள்" ஐப்பற்றிச்செய்த

## பிரஸங்கங்களின் ஸாரம்.

### சென்றகாலம்:—

இந்து தேசமானது பூர்வகாலத்தில் பிரமிக்கச்செய்யும் படியான நாகரீகத்தை யுடைத்தாயிருப்பதைப்பற்றியும், அக்காலத்தில் ஆரியர்களுக்குள் பேசப்பட்டு வந்த ஸம்ஸ்கிருத பாஷையின் மகிமையைப்பற்றியும், அப்பாஷையிலெழுதப்பட்ட கல்விசாஸ்திரங்கள், இலககண இலக்கியங்கள் முதலியவைகளின் சிறப்பைப்பற்றியும் ஐரோப்பிய சரித்திரக்காரர்களுக்கு ஒரு நூற்றாண்டுக்குமுன் எவ்வளவேனுந் தெரியாது. நூறு வருஷங்களுக்குமுன் ஸர்-உவில்லியம் ஜோன்ஸ என்பவரும் இன்னுஞ்சில வெள்ளைக்காரரும் இந்துதேசத்துக்கு வந்து சமஸ்கிருத பாஷையைக்கற்று, அதிலுள்ள சாஸ்திரங்கள் முதலியவைகளை வாசித்தறிந்து, அவைகளை உண்டாக்கியெழுதினவர்களாகிய பழையகாலத்து ஆரியர்கள் மகாபுத்தி, யுக்தி, ஞானம், சன்மார்க்கம், படிப்பு, ஆழ்ந்த யோஜனை முதலியவைகளை உடைததாயிருந்திருக்க வேண்டுமென்று ஐ

றைக்ஷ்யர்களுக்குச் சொல்லி அவர்களைப் பிரயித்துப் போரு
டி செய்தார்கள். வெள்ளைக்காரர்கள் அதற்குமுன் இப்பூ
மியில் கிரேக்கர், ரோமர் என்ற ஜாதியார்களுடைய காலங்க
ளுக்கு முன்னாக வேறொரு தேசத்தாரும் சீர்திருத்தத்தையும்,
மாட்சிமையையும், உடைத்தா யிருந்தார்கள் என்றாவது
அல்லது உடைத்தாயிருந்திருக்கலா மென்றாவது நம்பிக்கையி
ல்லை. இன்றைக்குங்கூட ஐரோப்பிய சரித்திரக்காரர் சமஸ்
கிருத பாஷையையும், அதிலுள்ள சாஸ்திரமுதலியவைகளை
யும் வாசித்து, அவைகளிலிருக்கும் உண்மைரகஸ்யங்களை ந
ன்றாய் அறியாததினாலும், தாங்கள் கிறிஸ்தவர்களாகையால்
தங்கள் மார்க்கத்திலும் சாஸ்திரங்களிலும் மிக அபிமானமு
டையவர்களாயிருப்பதினாலும், இந்துக்களுடைய வேதமுத
லியவைகளைப்பற்றித் தங்களுக்குத்தெரிந்திருக்குங் கொஞ்ச
ம் சிலாக்கியங்களையுங்கூட மறைத்து, அவைகளைக்குறித்துக்
கேவலமாய்ப்பேசி, தங்கள் கிறிஸ்துமதத்தை மிகவும் மெச்
சிக்கொண்டாடி யெழுதுகிறார்கள். கிறிஸ்து வேதபுஸ்தகத்
தில் ஏறக்குறைய ஆறாயிர வருஷங்களுக்கு முன்பாகத்தான்
இவ்வுலகமும், அதிலுள்ள யாவும், சூரிய சந்திரர்களும், ஸ
வாமியால், சிருஷ்டிக்கப்பட்டனவென்று சொல்லியிருக்கிறப
படியால் இச்சரித்திரக்காரர் ஆறாயிர வருஷத்துக்குமுன் இ
ந்தப்பூமி யிருந்ததில்லையென்றும், அதில் யாதொருசங்கதியும்
நடக்கவில்லையென்றுஞ், சொல்லுகிறார்கள். அவர்களில் சிலர்
ஆரியர்கள் ஆதி கிறிஸ்தவர்களாகிய யூதர்களிடத்திலிருந்து
தான் தங்களுடைய மார்க்கங்களையும், தொழில்களையும் பா
ஷைகளையுங்கூடப்பெற்றுக்கொண்டார்களென்று வெட்கமி
ல்லாமலும், பயமில்லாமலுஞ் சொல்லுகிறார்கள். சம்ஸ்கிரு
தமானது ஹீப்ரு பாஷையிலிருந்து உற்பத்தியானதாகச் சி
ல புஸ்தகங்களில் எழுதப்பட்டிருக்கிறது. கிறிஸ்துமத ஆதி

ரியர்களில் சிலர் இந்துமத புராணங்களும் கிறிஸ்துமார்க்க புஸ்தகங்களைகளும் கொஞ்சங்குறைய ஒன்றுபோலிருப்பதற்குக்காரணம், முற்காலத்தில் இயேசுக்கிறிஸ்துவினுடைய சிஷர்களிலொருவனாகிய செண்ட்தாமஸ் என்பவன் இந்தியாவுக்கு வந்து இங்கே கிறிஸ்துமதத்தைப் போதித்ததினால் என்றுரைக்கிறார்கள். இது ஆச்சரியம். ஆரியர் ஐரோப்பியர்களுடைய முன்னோர்களென்றும், ஐரோப்பியருடைய நாகரீகமும், கலவிசாஸ்திரங்களும், ஆரியர்களிடத்திலிருந்தே உற்பத்தியானதென்றும், சொற்பகாலத்துக்குமுன் மாக்ஸ்மல்லர் முதலிய ஐரோப்பிய சமஸ்கிருத வித்துவான்கள் சொல்லவெள்ளைக்காரர்களுக்குத் தெரியவந்தது. இன்னும் அநேகவருஷங்களாகிறதற்குமுன்னுக ஆரியருடையநாகரீகத்தைப்பற்றிய யதார்த்த முழுவதும் வெளியாய்விடுமென்றும், உங்களுடைய முன்னோர்கள் அவர்களுடைய யோக்கியதைக்குத்தக்கபடி கணம்பண்ணப்படுவார்களென்றும் நம்புவோமாக. ஆகவே ஐரோப்பியர்கள் சீர்திருத்தமடைந்ததற்கு வெகுகாலத்துக்கு முந்தியே இந்துக்கள் சிறந்த நாகரீகத்தையடைந்திருந்தார்களென்பதும், ஐரோப்பியர்கள் இந்துக்களிடத்திலிருந்துதான் தங்கள் சீர்திருத்தங் கல்வி முதலியவைகளைப் பெற்றுக்கொண்டார்களென்பதும் வெள்ளைக்காரர்களுடைய கருவத்தையடக்கும்; ஆனாலும் முன்னோர்களை அவர்களுடைய யோக்கியதைக்குத்தக்கதாக நாம் புகழவேண்டியதும், யதார்த்தத்தை வெளிக்குக்கொண்டுவரவேண்டியதும் நமது கடமையே கிறிஸ்துவேதபுஸ்தக மெழுதப்படுவதற்கும், யூதர்கள் ஒருஜாதியாய்ச் சேர்ந்ததற்கும், பாபிலோன் இராச்சியம் உண்டானதற்கும், கிறிஸ்து பிறக்குமுன் ஏறக்குறைய ௫௭00 வருஷங்களுக்குமுன் கட்டப்பட்டதாகச் சொல்லப்படுகிற இஜிப்து தேசத்திலிருக்கும் பிரமிட்ஸ் [கூர்நுனி கோபுரங்கள்] க

ட்டப்படுவதற்கும், மிகவும் அதிக காலத்துக்குமுன் இந்தக்கள் மகா சீர்திருத்தமுடையவர்களாயிருந்து, இப்பூமியில் வேறொரு பாஷையையும், இலக்கண நூலையும் நிகரானதென்று சொல்லவொண்ணாத சம்ஸ்கிருத பாஷையையும், அதின் வியாகரணத்தையும் பூரணஞ்செய்திருந்தார்கள். நான் செப்புவதை ருசுப்படுத்தும்பொருட்டு ஒரு உதாரணமெடுத்துக் காட்டுகிறேன். இப்போது வெள்ளைக்காரர் உலகத்தில், முதலாவது உண்டான இராஜ்யம் இஜிப்து ராஜ்யமென்றும் அத்தேசந்தான் மற்ற யாவற்றிலும் முதலாவது நாகரீகமடைந்ததென்றும், ஒப்புக்கொள்ளுகிறார்கள். இந்த இஜிப்து இராஜ்யத்தை ஸ்தாபித்து, அதின் முதலாவது அரசனாயிருந்து அதினுடைய நாகரீகத்துக்குக் காரணமாயிருந்தவர் மீனெஸ் என்பவர். இவர் இதற்கு எவ்வளவு காலத்துக்கு முன்னிருந்தவர்? இக்காலத்து இஜிப்துதேச சரித்திரக்காரர்களில் பேர்ப்போனவர்கள், அவரிருந்த காலம் கிருஸ்து பிறக்குமுன் ருOOO முதல் சுOOO வருஷங்களுக்குக் குறைவாயிருக்கலாமென்றுசொல்லத்துணியார்கள். ஆகவே, இதற்கு அOOOவருஷங்களுக்குமுன் இஜிப்துதேசத்தார் தெய்வபக்தி, கலவி, சாஸ்திரம், நல்லொழுக்கம், ராஜ்யதந்திரம், முதலிய விஷயங்களில் பூரணதேர்ச்சியை யடைந்திருந்தார்கள். அவ்வளவுகாலத்துக்குமுன், இஜிப்து தேசமானது அப்பேர்ப்பட்ட ஸ்திதியிலிருந்ததென்றால், இந்தியாவானது மற்றஎல்லா தேசங்களுக்கு முந்தியே நாகரீகமடைந்திருந்ததென்று ஏன் நாம் சொல்லவேண்டும், இஜிப்து தேசந்தான் அப்படியிருந்ததாகச்சொல்லக்கூடாதாவென்று நீங்கள் கேட்பீர்கள் ஐரோப்பியர்களாகிய எங்களில் சிலருக்கு இந்தியாதான் முந்தினதென்று தோன்றுகிறது. இந்த தேசமானது அOOO வருஷங்களுக்குமுன் அந்த நிலைமையிலிருந்ததாக பிராமணர் தங்கள் சரித்.

திரங்களில் எழுதியிருக்கிறார்கள்? அவர்களுடைய கணக்கு கள்ளக்கணக்கென்று தீர்மானிக்க யார்க்கு முகாந்திரமில்லை. 4000 வருஷங்களுக்குமுன் இந்தியாவிலிருந்து கொஞ்சம் ஜனங்கள் புறப்பட்டு, இப்போது இஜிப்து தேசமென்று சொல்லப்படுகிற நாட்டில் குடியேறி, அங்கே தாங்கள் இந்தியாவிலிருந்து கூடக்கொண்டுபோன கல்விமுதலியவைகளைப் பரப்பினார்கள் என்று நாங்கள் நினைக்கிறோம். முற்றிலும் நம் பக்கடிய இஜிப்து தேச சரித்திரக்காரரும், புராதனகலைஞருமாகிய பிரக்ஸ்டே என்னும் துரையும் இதே அபிப்பிராயமுடையவராயிருக்கிறார். இஜிப்து தேசத்தார்களும் தாங்கள் பூர்வத்தில் இந்துமகா சமுத்திரத்தின் கரையி லிப்போதிருக்கிறதாகச் சொல்லுகிற "பண்ட்" என்ற ஒரு அறியாத தேசத்திலிருந்து இஜிப்து தேசத்துக்கு வந்ததாக தங்கள் சரித்திரங்களில் எழுதியிருக்கிறார்கள். "பண்ட" என்பதற்கு பரிசுத்தமான நாடு என்றர்த்தம். இந்தப் பரிசுத்தமான நாடானது "பாலஸ்டின்" ஆய் இருக்கவேணுமென்று கிறிஸ்தவர்கள் நினைக்கிறார்கள். இது தப்பு. ஏனெனில் "டொப்பாக்கி" என்றவிடத்திலிருக்கும் "குவீன்ஸ்ஹஷ்டாப்" என்னுங்கோவிலின் மதில்களின்பேரில் எழுதப்பட்டிருக்கிற சித்திர யூகபாஷை வரைதல்களை வாசித்துப்பொருள்படுத்திப்பார்த்தால், இந்த "பண்ட்" என்ற தேசமானது இந்தியாவேதவிரவேறொன்றுமிருக்கக்கூடாதென்று நமக்குத் தெளிவாய் விளங்கும். பழையநாள் இஜிப்து தேசத்தார் தங்கள் பூர்வீக தேசமாகிய இந்தியாவோடு வெகுகாலமாய் வியாபாரஞ் செய்துவந்தார்கள். அப்படி வியாபாரம் நடந்துவந்த காலத்தில், அவர்களால் சொல்லப்பட்ட "பண்ட" தேசத்தின் அரசர்களின் பெயர்களையும், மிருகங்கள், செடிகள், இவைகளின் பெயர்களையும், விசேஷமாய் இந்தியாவி லுண்டாகிற விலையுயர்ந்த விருக்ஷங்

களின் பெயர்களையும், நாம் கவனித்துப்பார்த்தால் அந்த இஜிப்தியர்களுடைய தாய்தேசம் ஆரியாவர்த்தமே ஒழிய வேறொன்றுமில்லையென்று ஐயமற நமக்குத்தோன்றும். ஆகையால், ஐரோப்பாவில் எவ்வளவாவது நாகரீகமுண்டானதற்கும், புஸ்தகங்கள் அச்சுப்பதிப்பதற்கும், பள்ளிக்கூடங்கள் போடப்படுவதற்கும் அநேகமாயிரம் வருஷங்களுக்கு முந்தி உங்களுடைய முன்னோர்களாகிய சிறந்த ஆரியர்கள் கல்விகற்றவர்களாயும், மரியாதையுள்ளவர்களாயும், சாஸ்திரங்களிற் றேர்ந்தவர்களாயுமிருந்தார்கள். அவர்கள் ஜாதி வர்ணாச்சிரமங்களால், நீங்கள் இப்போதிருப்பதுபோல சேரக்கூடாதபடி பிரிந்திராமல், தங்கள் தங்களுடைய இயல்பான யோக்கியதைக்கும் திறமைக்குத் தக்கபடியாய்ப் பிரிவுபட்டிருந்த அந்தஸ்துகளையுடைய ஸ்தானங்களுக்கு உயர்வாவது, அல்லது மிகவும் கேவலமான ஸ்திதிகளுக்குத்தாழ்வாவது அடையும் நிலையிலிருந்தார்கள். அக்காலங்களில ஆரியர்களுக்குள் பெரிய சாஸ்திரிகள் இருந்தது மாத்திரமல்ல, பெரிய வியாபாரிகளும், வயித்தியர்களும், சங்கீத வித்வான்களும், நாடகமேடைக்காரர்களும், கவிகளும், மந்திரிகளும், படைவீரர்களும், ஆசாரிகளும், கைத்தொழிலாளர்களும், வர்த்தகர்களும், இருந்தார்கள். "சதுஷ்ஷஷ்டிகலைஞானம்" என்ற சம்ஸ்கிருத புஸ்தகத்தில், பழைய காலங்களில இந்துக்களுக்குள் வெவ்வேறு விதமான 50 தொழில்கள் வழங்கிவந்தனவென்று சொல்லப்பட்டிருக்கிறது. இதிலிருந்து அக்காலங்களிலுள்ள ஆரியர்கள் சாமான்ய சுபாவங்களை மாத்திரமல்ல, நாகரீகமடைந்த ஒரு ஜாதியாருக்குள் உண்டாயிருக்கும் பெருவாழ்வையும், விநோதவேடிக்கை, உல்லாசங்களையும் அநுபவித்துவந்தார்களென்று துலக்குகின்றது. பூர்வ காலங்களிலாவது, இக்காலத்திலாவது ஆரியர்களைப்போலயுத்தி புஸ்தகங்களில் அவ்வளவுஅற்புதங்களை

யுடைத்தாயிருந்து உலகிலுள்ளோர் யாவராலும் புகழ்ந்து பூஜிக்கப்பட்டார்களென்பதும், அவர்களிற் சிலர் ஆயிரத்துக்கதிகமான சிஷர்களை உடைத்தாயிருந்தார்களென்பதும் சமுசயமன்னியில உண்மையே. நியாயமாய் நிதானிகளும் யாவரும் பூர்வகாலத்து இந்துக்கள் மகா விசாலமான படிப்பையுடையவர்களென்று புகழாமலிரார். அவர்கள் எழுதிய பற்பலவகையான சங்கதிகளைப் பார்த்தால, அவர்களுக்குள் ஒவ்வொருசாஸ்திரமும் வித்தையும் நன்றாய்ப் பயிற்சி செய்யப்பட்டனவென்றுகாண்கிறது. இந்தசங்கதிகளைக்குறித்து அவர்கள் எழுதியமாதிரியும அவர்கள் பூர்வகாலத்திலுள்ள ஜனங்களெவரிலும் அதிக சிலாக்கியமுடையவர்களாயிருந்தார்களென்று வெளியிடுகிறது. எவ்வளவுக்கெவ்வளவு ஒருவன் இந்துக்களுடைய சாஸ்திர புஸ்தகங்களையும், சட்டபுஸ்தகங்களையும், படிக்கிறானோ, அவ்வளவுக்கவ்வளவு அவன் அந்த கிரந்தங்களை எழுதிய வித்துவான்கள் நுட்பமான அறிவையும், அரிதான ஞானத்தையுமுடையவர்களாயிருந்திருக்க வேண்டுமென்று நம்பும்படி செய்யப்படுகிறான்." உங்கள் முன்னோர்களைக்குறித்து பக்ஷபாதமன்னியில் ஸ்துத்தியமாய்ச் சொல்லிய இவ்வார்த்தைகளைக் கருத்துடன் சிந்தித்துப்பார்த்து உங்கள் முன்னோர்கள், எவ்வளவு பெரிய மகான்களாயிருந்தார்களென்றறியுங்கள்.

உங்கள் தேசத்தாருக்குள் அநேகர் தங்கள் முன்னோர்களைவிட இக்காலத்து வெள்ளைக்காரர் கல்விசாஸ்திரங்களில் உயர்ந்தவர்களென் றெண்ணி, என்னைப்பார்த்து, அக்காலத்திலுள்ள ஆரியர்களாவது அல்லது வேறெந்த கீழ்த்தேசத்தாராவது ஐரோப்பியரிப்போது கண்டுபிடித்திருக்கிற அர்த்த பலவ், கிராமியயந்திரங்களைப்போலசிறந்த ஏதேனுங்கண்டு பிடித்தார்களோவென்று அடிக்கடி கேட்டிருக்கிறார்கள். இந்த

கு என்பதிலென்னவெனில், நாம் "சூரியஸித்தாந்தம்" என்
ற கிரந்தத்தை வாசித்தால், ரோவியின் லெக்ஷணங்கள் அக
காலத்து ஆரியர்களுக்குத்தெரிந்திருந்தனவென்று நமக்குத்தெ
ரியவரும். வெள்ளைக்காரர்களுக்கு வெகுகாலத்துக்குமுந்தி
யே, சீனர் பந்தகம் அச்சிடும் வித்தையை யறிந்திருந்தார்க
ள். பழையகாலத்து ஆரியர்களுக்கு ஒருவிதமான மின்தபா
ல தெரியும். அதனால அவர்கள் ஒருவருக்கொருவர் எவ்வள
வதூரத்திலிருந்தபோதிலும், சுலபமாய்ப் பேசிக்கொள்ளக
கூடும். அந்த மின்தபாலுக்கு, இப்பொழுது வெள்ளைக்கார
ருடையதுக்கிருக்கிறதுபோல, தந்திகளாவது, தூண்களாவ
து ரசாயனப்பானைகளாவது தேவையில்லை. இந்தவித்தை
இன்றைக்குங்கூட உங்களிற் சிலருக்குத்தெரியும். அதென்
னவென்றறிய உங்களுக்கு விருப்பமிருக்கிறதா? நான் அதை
உங்களுக்கும், பரிசுத்தமான காரியங்களைப்பரிகாசம்பண்ணி,
என்னமோ கசாபிசாவென்று கொஞ்சம் இங்கிலீஷ் படித்
திருதல், தங்கள் முன்னோர்களை வெட்கமன்னியில் தூஷிக்கி
ற மூடர்களும், ஏளைப்படிப்பு மூடர்களுமாகிய இந்துக்களு
க்கும் சொல்லுகிறேன். உங்கள் தேசத்தில் முன்னேயிலி
ருந்த யோகிகளும், இன்றைக்குங்கூட யோகசாஸ்திரத்திற்
சொற்பப்பாண்டித்தியமும் அநுபோகமுமுடைய எல்லாரு
ம் மேலே சொல்லியவாறு பேசிக்கொள்ளக்கூடும். உங்களிற்
சிலர் நான் சொல்வதை நம்பீர்கள், என்றாலுமிது வாஸ்தவ
மானதுதான.

மேலும், ஆரியர்கள் வேறொரு வகையான வித்தையை அ
றிந்திருந்தார்கள். அதைப்பற்றி வெள்ளைக்காரர்களிப்போது
வெகுவாய்ச்சிந்தித்துக்கொண்டிருக்கிறார்களேயொழிய, மற்
றப்படியொன்றையு மறியவில்லை. உங்கள் முன்னோர்கள்,

ஆகாயத்திற் பிரயாணஞ்செய்வார்கள். அப்படிச்செய்ததுமாத்திரமல்ல, ஆகாயத்திற் சண்டைகளுங் கூடப்போடுவார்கள் அவ்வித்தையி லிவ்வளவு தேர்ச்சியை யடைந்திருக்கவேண்டுமானால், அவர்கள் அதைப்பற்றிய சகல சாத்திரங்களையும், சாதனங்களையும், ஆகாயத்திலிருக்கும் சகலகாற்றுகளையும், ஓட்டங்களையும், அங்கங்கேயிருக்கும் சீதோஷ்ண நிலைமைகள், ஈரம், நெருக்கமுதலியவைகளையும், வெவ்வேறுவாயுவின் விசிஷ்டகுருத்துவத்தையும் பூரணமாய்த்தெரிந்திருக்கவேண்டும். மகாபாரதத்திற் சொல்லப்பட்டிருக்கிற "மாயாசபையில" 'பூதக்கண்ணாடிகளும், தூரதிருஷ்டிக்கண்ணாடிகளும், கெடிகாரங்களும், நாழிகைவட்டங்களும், யாமெ ருத்திரபக்ஷிகளும், பேசும் ருத்திரமிருகங்களும் இருந்தன. தவிரவும், அவர்கள் "அஷ்டர் வித்யா" என்ற வேறோர் வித்தையையும் அறிந்திருந்தார்கள். அதனால், அவ்வித்தையிற் பாண்டித்தியமுடையவர்கள், சத்துருக்களுடைய சேனைகளை, விஷமுள்ள வாயுக்களாலும் அச்சமுறுத்தத்தக்க மாயாவடிவங்களாலும், இடியுண்டாக்கக்கூடிய சப்தங்களாலும் நிறையப்பட்ட ஆகாயத்தாற் சூழ்ந்துகொண்டு அவைகளை யழித்துப்போடுவார்கள். இந்தச் சாத்திரத்தைக்குறித்து எங்கள் தேசத்து வித்துவான்களுக்கு இன்றைவரைக்கு மெவ்வளவென் இலுந் தெரியவராது.

வெள்ளைக்காரருடைய நாகரீகமானது ஆரியாவர்த்தத்தில் உற்பத்தியாயிற்றென்பதாக நமக்குஐரோப்பிய தேசத்துப்பாஷைகளையும், சம்ஸ்கிருத பாஷைகளையும் வாசித்து ஒத்துப்பார்ப்பதினால் துலங்குகிறது. அதுபோலவே, நாம் பாபிலோனியா, இஜிப்து, கிரீஸ், ரோம், வடஐரோப்பாமுதலிய தேசங்களின் சாத்திரங்களையும், மார்க்கங்களையும்வாசித்துப்பரித்

தால் அவைகளும், இந்துதேசத்திலிருந்தே வெள்ளைக்காரர் தங்கள் சாத்திரமுதலியவைகளைக் கற்றுக்கொண்டார்களென்று நமக்கு ருசுக்கொடுக்கின்றன. ஒருவன் பித்தாகொரஸ் சாக்ரட்டீஸ், ப்ளேட்டோ, அரிஸ்டாட்டல், ஹோமர் முதலிய வெள்ளைக்காரதேசத்து ஞானிகளால் எழுதப்பட்ட சாத்திரங்களின் பக்கத்தில், வேதவியாசர், கபிலர், கௌதமர், பதஞ்சலி, கணடர், ஜெய்மினி, நாரதர், பாணினி, மரீச்சி முதலிய இந்துதேசத்து ரிஷிகள் உண்டாக்கிய சாத்திரங்களை வைத்து வாசிக்கத்தான்வேண்டும், உடனே அவன், அவைகளெல்லாம் ஒரே குணத்தை யுடையவைகளாயிருப்பதைப்பற்றித் திகைக்கிட்டுப்போவான். இவ்விதமா யிவைகளெல்லாம் ஒத்திருப்பது, இந்தியாதேசத்தார் தங்களுடைய கல்விசாத்திரங்களை ஐரோப்பியருக்குக்கற்றுக்கொடுத்ததினாலல்லாமல், வேறெவ்வகையாயாவது இருந்திருக்கக்கூடுமென்பது முழுதும் அற்புதமுள்ளதாயிருக்கும். மனிதர்களுடைய மனசானது பற்பலகாலங்களில் ஒரே இயல்புள்ள எண்ணங்களைத் தோற்றும்படிசெய்யச் சக்தியுள்ளதாயிருந்தபோதிலும், ஒரு நிலைக்கண்ணாடியைப் பார்க்கும் பொருளும், அக்கண்ணாடியிற் காணப்படும் சாயையும் எப்படி ஒன்றுக்கொன்று பேதமின்னியிற்றென்றமோ, அப்படி இந்தஞானிகளுடைய அபிப்பிராயங்களும், அவர்களுக்குப் பிந்தியகாலங்களி லிருந்தவர்களாகிய கிரேக் ரோம தேசங்களின் சாத்திரிகளுடைய அபிப்பிராயங்களும் சரியாய் ஒத்திருப்பது, இந்தியாதேசத்திலிருந்து பூர்வகாலத்தில்வித்துவான்களாவது, புத்தகங்களாவது ஐரோப்பாதேசத்துக்குப் போயிருப்பதினாற்றானிருக்கக்கூடுமேயல்லாது, மற்றெவ்விதமாயாவது இருந்திருக்கலாமென்பது நமது இயற்கையறிவுக்கே, விரோதமாய்த் தோன்றுகிறது. இதுவரைக்கும் முற்காலங்களில் உங்களுடைய தேச

ம் எந்த ஸ்திதியிலிருந்ததென்றும், உங்கள் முன்னோர்கள் எப்படிப்பட்டவர்களாயிருந்தார்களென்றும் கூடியவரை சொன்னேன். இப்பொழுது, உங்கள் தேசமும் நீங்களும் தற்காலத்திலிருக்கிற நிலைமையைக்குறித்துச்சொல்லுகின்றேன்.

நிகழ்காலம்.

பழையகாலங்களில் மஹாகீர்த்தியடைந்திருந்த இந்த ஆரியவர்த்தத்தை நேசிக்கிற ஒருவன், தனக்கு வியசனமுண்டாகாதிருக்க விரும்பினால் அவன் இத்தேசத்தின் சென்றகாலத்தைப்பற்றி வெகுநேரமாய்ப் பேசிக்கொண்டிருக்கக்கூடாது. அப்படிச்சம்பாஷித்துக்கொண்டிருந்தால், அக்காலங்களிலிருந்த அநேக மஹாத்மாக்கள் ஒருவர்பின் னொருவராய் அவன் மனசில் தோன்றிக்கொண்டிருக்க, அவன் அவர்கள் தங்கள் தங்கள் காலங்களிலடைந்திருந்த உயர்ந்த நிலாக்கியங்களைப் பார்த்துவிட்டு, பின்பு அவர்களுடைய சந்ததியாராகிய நீங்களிருக்கிற சீரையும் பார்க்கையில், எவ்வளவு கல்நெஞ்சனாயிருந்தாலும், அவன் மனமிடிந்து போகாமலிருப்பது அசாத்தி[illegible] முன்னோர்களிலிருந்த அப்பேர்ப்பட்ட ஞானிகளும், சூரவீரரும், புத்திமான்களும், இப்போதெங்கே? அக்காலங்களிலிருந்த சந்தோஷமும், சுயாதீனப்பிரிய சித்தமும், ஆரியர்கள் தாங்கள் உலகமாளத்தகுந்தவர்களென்றும், தேவர்களுக்குங்கூடத் தாங்கள் சமமானவர்களென்று மதித்துநடக்கத்திராணியுடையவர்களென்றும் எண்ணும்படி செய்த கெம்பீர குணமும் இப்போதெங்கே? சாமர்த்தியத்திலும், தந்திரத்திலும், உவமைசொல்லவொண்ணாத அக்காலங்களிலுள்ள சிற்ப சாத்திரிகளும் இப்போதெங்கே? வேதசாத்திரங்களைக்கற்று அவைகளிற் பூரணதேர்ச்சியையடைந்திருந்த பிராமணரிப்போதெங்கே, போய்விட்டார்கள் ஐயோ! எல்

லரும் போய்விட்டார்கள்! நித்திரையிற் காணும் சொற்பனம்போல் அவர்களியாவரும் வெகுநாளைக்குமுன்னதாக மறைந்துபோய்விட்டார்கள். நிகழ்காலத்திலிருக்கும் இந்துக்களோ, முந்தியுள்ளவர்களைப்போலில்லாமல், கெட்டு கேவலமடைந்திருக்கிறார்கள். மிகமஹத்துவம் பொருந்தியிருந்த பழைய ஆரியவர்த்தாவும் சொற்பனம்போல் நமது ஞாபகத்தில் மங்கிவிட்டது. இன்றைக்கு நமது கண்களுக்குமுன்பாகத் தாழ்வடைந்து கஷ்டப்படுகிற இந்தியாதான் நமக்கு மிகவும் பிரத்யக்ஷமான உண்மைபோலத் தோன்றுகிறது. அதே நிலம் இதோவிருக்கிறது, ஆனால் அதின் கொழுமை குன்றிவிட்டது. ஜனங்கள் இங்கே யிருக்கிறார்கள், ஆனால், ஐயோ! எவ்வளவு க்ஷாமமடைந்து நொறுங்கிப்போய்விட்டார்கள்! முற்காலங்களில் இத்தேசத்தி லெங்கேபார்த்தாலும் வனங்களிருந்து காலாகாலங்களில் மழைபொழியச்செய்து, அதினாலெப்போதுந் தீய்வில்லாமல் அதிகமேனியுள்ள மாகுலைக் கொடுக்கும்படி செய்துவந்தன, ஆனாலவ்வனங்களிப்போது அநேகமாய் வெட்டுண்டு அழிக்கப்பட்டபடியால், இத்தேசமுழுவதும் மழையன்றியிற் கொடூரமான வெயிலிற் பொரிகின்றது. இந்தத்தேசத்து விளைச்சல் ஆகாரத்துக்குக் காணாதிருக்கும்படியாய் ஜனங்கள் மிகப் பெருகிவிட்டார்கள். ஆகையால் அக்காலங்களில் மிகவும் அபூர்வமாயிருந்த பஞ்சமானது, இக்காலத்திற் கொஞ்சங்குறைய வழக்கமாய்வருகின்றது. இந்தியாவிலிப்போதிருக்கும்குறைந்தது நாலுகோடிவேலையாட்களுக்கு, செழிப்பான காலத்துக்கும் பஞ்சமானகாலத்துக்கும் வித்தியாசமென்னவென்றால், அவர்கள்செழிப்பானகாலத்தில் மூக்காற்பட்டினியும், பஞ்சகாலத்தில்முழுப்பட்டினியுமாய்க் கிடப்பதுதான். தற்காலத்துசமுசாரியானவன் ஏழையாயும், உடுக்கவஸ்திரமன்னியிலும், தன் நிலை

மையைச் சீர்ப்படுத்தக்கூடிய சந்தர்ப்பங்களாவது நம்பிக்கைகளாவது இல்லாமலும், அன்றன்றைக்கு வயிறுகழித்து எப்போ மரணம்வந்து தன்னைத் தன் கஷ்டத்திலிருந்து விடுவிக்கப்போகிறதென்று விசனத்துடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறான். முற்காலங்களிலிங்கே ஜனங்களுக்குள் நேசமும் ஒற்றுமையும் இருந்தன; இப்பவோ, பகையும், பிரிவினையும் உண்டாய், ஒருநாட்டாருக்கும் மற்றொரு நாட்டாருக்கும், ஒரு ஜாதியாருக்கும் மற்றொரு ஜாதியாருக்கும், ஒரு குடும்பத்தாருக்கும் மற்றொரு குடும்பத்தாருக்கும், ஒரு சகோதரனுக்கும் மற்றொரு சகோதரனுக்கும், ஆகாமலிருக்கிறது. உங்கள் முன்னோர் அவர்கள் தேசத்தைத் தங்கள் ஜீவனைப்போல் நேசித்து, அதற்கு எதாவது அவமான மல்லது கெடுதல் நேரிட்டால், மிக வெட்கமடைந்து அதை விலக்கும்பொருட்டுத் தங்கள் உயிரைக்கொடுப்பார்கள். இப்பவோ பேராசையென்னும் பிசாசானது உங்களைப்பிடித்து, மேன்மைதங்கிய முயற்சியாதொன்றையுஞ் செய்யவொட்டாமல் தடுக்கின்றது

வயிற்றுப்பாடானது உங்களை யிச்சகம்பேசுகிறவர்களாகவும், கோழைத்தனமுந் துரோகச்சிந்தையுமுள்ளவர்களாகவும் ஆக்கிவிட்டது. ஒருகாலத்தில் கௌரவமாயும் செழிப்பாயுமிருந்த நீங்கள், இப்போ கெட்டு நொறுங்கிப் போய்விட்டீர்கள். பூர்வ ஆரியாவர்த்தத்தை நேசித்துக் கனம்பண்ணுகிற யாவருக்கும் இந்நிலைமையைப் பார்க்க வெட்கமும் மனநோவுமுண்டாகும். அந்நாட்களில் மிகத் திரளான ஜனங்கள் வசிக்குமிடங்களாயும், பெருவாழ்வுக்கு மத்தியஸ்தானங்களாயும், மார்க்க சாஸ்திர சித்தாந்தங்களுக்குக் களஞ்சியங்களாயுமிருந்த மஹத்தான நகரங்கள் இன்றைக்கு இடிந்து புழுதியாய்க் கிடக்கின்றன. அப்பாழ்களில் அஸிங்கமான விலங்குகளும்

பிணந்தின்னிப் பக்ஷிகளும் வசிக்கின்றன. அவைகளின்ன
விடங்களி லிருந்தன வென்பதுகூட மறந்துபோய்விட்டது.
பூர்வகால வர்த்தமான நிர்ணய சாஸ்திரிகள் பூமியைத் தோ
ண்டுகையில் சிலவேளைகளில் மேலேசொன்ன நகரங்களைச்
சேர்ந்தசாமான்களைக் கண்டெடுக்கிறார்கள். இவ்வஸ்துக்களு
ம் பூர்வ ஆரியசாசனங்களில் எழுதப்பட்டிருக்குஞ் சங்கதிக
ளை ஸ்திரப்படுத்துகின்றன. இத்தேசத்து இராஜ்யசங்கதிகளை
க்குறித்து எனக்கு விசேஷமாய்ஒன்றுந் தெரியாதிருந்தும்,
அப்படித் தெரிந்திருந்தபோலும், நானிப்போது துறவறத்
தை நாடியிருப்பவனானதினாலும், அவைகளைப்பற்றி ஒன்றும்
பேசேன். நானறிய விரும்பங்கொண்டவை இந்துதேசத்து
க்கல்வி,சாஸ்திரம், மதம் முதலியவைகள்; அவைகளைக்கற்று
ணர்வதற்காகவே இந்தேசத்துக்கு வந்திருக்கிறேன். அவை
களைப் பார்த்தபின்பேதான் அக்காலத்தி லப்படியிருந்த
இந்தியா இக்காலத்தி லிப்படியாகிவிட்டதேயென்று விசன
ப்படுகிறேன். இப்போது பிராமணர் கேவலமான அலுவல்க
ளில் வேலைபார்த்து வருகிறார்கள். அவர்களுக்குள் ஊடே
ஊடேதான் ஒன்றிரண்டு சம்ஸ்கிருத வித்துவான்களைக்காண
லாம். அனைவர்களில் மிகுதியானவர்கள் தங்கள் ஜீவநாட்க
ளை வேதநூல்களை அப்பியசிப்பதில் செலவிடுவதற்கு வேண்டி
ய ஆதாரவொன்றுமில்லாததுபற்றி, தங்கள் முன்னோர்க
ளின் வழக்கத்தை விட்டுவிட்டபடியால்,அவர்கள் மகிமைகெ
ட்டுவிட்டது. இப்போ வேதசாஸ்திரங்களிற் சொல்லியிருப்ப
வைகளை அவர்கள் நம்புகிறதில்லை.பதஞ்சலி,சங்கராசாரியார்,
கடர்முதலியமஹாயோகிகளின் சந்ததியாராகிய பிராமணர்
மனிதனுக்கு ஆத்மாவாவது, விரிந்து வெளியாக்கக்கூடியம
றைவான ஆத்மசத்தியாவது உண்டோவென்று சந்தேகிக்கி
றார்கள். இச்சர்வ சந்தேகமானது இத்தேசத்து வாலிபர்க

ருடைய மனசுகளைக் கெடுத்துவிடுகிறது. அவர்களில் மஹா புத்திசாலிகள் வெள்ளைக்காரருடைய சாஸதிரங்களை கற்ப திஞல் ஆத்மாவேது, ஒன்றேது என்கிருர்கள், இனிமேல் மறுமையென்று ஒன்றுண்டென்பதைப்பற்றியாவது, அல்ல து இம்மையிலேயே ஆத்மாசெய்யக்கூடிய மஹா அற்புதங்க ளைப்பற்றியாவது அவர்களுக்கு நம்பிக்கையில்லே. இதற்குமு ன் பம்பாய் கவர்னராயிருந்த சர் ரிச்சார்ட் டெம்பிள் என்ப வர் "இங்கிலீஷ் படிப்பானது இந்துக்களுடைய மத நம்பிக மையை வேரோடே அசைத்துக்கொண்டிருக்கிறது" என்று ம், "இங்கிலீஷ் படித்த இந்துக்கள்" பிரமசமாஜ், பிரார்த்த னை சமாஜ், தியசாபிகல் சமாஜி என்ற மூன்றுவிதமான புது மதங்களை உண்டாக்கிக்கொண்டிருக்கிருர்கள்" என்றும் கொ ஞ்சநாளைக்குமுன் சொன்ஞர். இவ்வளவெல்லாஞ் சொன்ன வர் தயாநந்த சரஸவதி ஸவாமியவர்களால் உண்டுபண்ணப் பட்டிருக்கிற "ஆரியசமாஜ்" என்ற ஒருமஹா சபையைக்குறி த்து ஒரு வார்த்தையாவது பேசவில்லே. அப்படியாஞல் அ துஒரு சின்னச் சபையா? இல்லே. அதைச்சேர்ந்த கிளை ச்சபைகளிப்போதே ஐம்பது உண்டாய்விட்டன. அதின் ஓர் பிரிவாகிய "பம்பாய் ஆரியசமாஜ்" க்கு, பம்பாய் கவர்னரு டைய ஆலோஜனை சபையில் ஓர் மெம்பராகிய ராவ்பஹதூர் கோபாலராவ் ஹரி தெசமுக் என்பவர் தலைவராயிருக்கிருர். இச்சபையைச்சேர்ந்த ஆட்கள் இப்போதே முன்சொன்ன மூன்று சபைகளைச்சேர்ந்த ஆட்கள் எல்லாருங்கூடி எவ்வள வு பேர்களிருக்கிருர்களோ அவ்வளவு பேர்களிருக்கிருர்கள். தவிரவும், சர் ரிச்சார்ட். டெம்பிள் என்பவர், "வாலிப இந் துக்களி யாவரும் இப்போது கிரிஸ்துமார்க்கத்தைச் சேரத்த யாராயிருக்கிருர்களாகையால், இந்தியாதேசத்துக்குஇன்னு மதிகப் பாதிரிகளை யனுப்புவதற்கு இதுவே காலம்" என்று இ

ங்கிலாந்திலுள்ள வெள்ளைக்காரரிடத்திற் சொல்லுகிறார் நா னிது முற்றிலுந் தப்பென்னமென்று நினைக்கிறேன் மே லேசொன்னமார்க்கச்சீர்திருத்தஞ்செய்யும்சமாஜிகளைச்சேரா த வாலிப இந்துக்கள், தங்கள் பழைய மதத்தில நம்பிக்கை யில்லாதவர்களாக ஆனபோதிலும் இதரமத மெதையாவது சேரப்பட்டவர்களல்ல ஐரோப்பா. அமெரிக்கா தேசங்களி லுள்ள இளைஞர் எப்படித் தங்கள். படிப்பினால் கெட்டுப் போகிறார்களோ, அப்படியே இத்தேசத்திலுமிருக்கின்றது. வெள்ளைக்காரர் தேசத்து சாஸ்திரங்கள் தெய்வபக்தியை ய ழித்துவிட்டன தெய்வ சிருஷ்டிப்பை நன்றாய்க் கவனித் துத் தீரவிசாரணைசெய்யாததினால் நாஸ்திக மதமுண்டாயி ருக்கிறது. அப்படியில்லாமல் அதை நன்றாய்ச் சிந்தித்தறிந் தால், அது ஒருவனைத்திரும்பவுமுன்போலவே தனக்குள் ஆ த்மா ஒன்றுண்டென்றும், அவ்வாத்மா அவன் மரணத்திற் குப் பின்னிருந்து அவனுடைய கருமங்களுக்குத்தக்கதாகப் பலனையநுபவிக்குமென்றும் நம்பச்செய்யும். சாஸ்திர நூல்க ளைமுற்றும் நன்றாய் வாசித்தறிந்து, ஐயமறத் தெளிந்தாலல் லாமல், யதார்த்தம் வெளிப்படா; இவ்வித ஆத்மஞானத்தை யுண்டாக்கி யெங்கும் பரவச்செய்யும்பொருட்டு நாங்கள் வெ குவாய் முயற்சிசெய்து கொண்டிருக்கிறோம். வேறுபோத கர்களும் ஒருபுத்தகத்தை அதுகடவுளால் வெளியிடப்பட் டதென்றும், ஆகையாலதை விசுவாசித்து அதிற்சொல்லிய மார்க்காநுஷடானங்களைக் கைக்கொள்ளவேண்டுமென்றும் வாலிபருக்குப் போதிக்கிறார்கள். இன்னுஞ் சிலர் தாங்கள் சன்மார்க்க வழிகாட்டிகளென்றும், குருக்களென்றுஞ் சொ ல்லுகிறார்கள். நாங்களோ அப்படியல்ல. தெய்வத்தால் வெளி யிடப்பட்டன வென்று சொல்லப்படுகிற யாவற்றிலும், தெ ய்வப்பிழைப்பே முற்றிலும் பொய்யாததென்றும்; சாஸ்திர ங்

தானதின் இரகஸியங்களை வெளிக்குக்கொண்டுவரத் தகுந்ததென்றும் நாங்கள் சொல்லுகிறோம். ஆனால் நாங்கள் சொல்லும் சாஸதிரம் ஐரோப்பாவிலுள்ள சொற்ப அறிவாளர் போதிக்கிற சாஸ்திரத்தைவிட மிகவதிக விரிவும், உயர்வும், மேன்மையுமுள்ளது. இத்தத்துவத்தில் நாம் பார்க்கக்கூடியவைகள் பார்க்கக்கூடாதவைகள்; தெரிந்தவைகள், தெரியாதவைகள்; வெளிக்குத் தோன்றுகிறவைகள், மறைந்திருப்பவைகள், ஆகியவிவைகளையெல்லாமடக்கிக் கொண்டிருக்கிறது. சுருக்கிச்சொல்லில், நாங்கள் சொல்லும் சாஸதிரமானது, உங்கள் வேதசாஸதிரந்தான். அதை யுண்டுபண்ணினதும், அதிற்சொல்லியவைகளை அநுபோகத்துக்குக் கொண்டுவந்து ஸித்தியடைந்ததும் உங்கள் முன்னோர்களே. எங்கள் தேசத்துக் கல்விமான்கள் ஒருகண் குருடர். ஏனெனில், தத்துவத்திலிருக்கும் ஜடம், ஆத்மா, என்ற இரண்டில், நாம் கண்ணாற்பார்க்கக்கூடிய ஜடந்தான்மெய்யென்றும், பார்வைக்குட்படாத ஆத்மா பொய்யென்றுஞ் சொல்லுகிறார்கள் அவர்கள் போதனைகளை நம்பி இத்தேசத்து வாலிபர்களும் ஆத்மக்கண் குருடராய்விட்டார்கள். சர் ரிச்சர்ட் ஆனவர் "இங்கிலீஷ்படிப்பானது இந்துக்களைத் தங்கள்மதத்தில் எவ்வளவும் விசுவாசமில்லாதவர்களாக்கிவிட்டது" என்பது சரி; ஆனால் அவர் "கிரிஸ்துமார்க்கத்தை அவர்களுக்குப் போதித்தால், அவர்களுடைய தெய்வபக்தி கெடாது" என்பது தப்பு. காரணம், கிரிஸ்துமதமானது ஐரோப்பா, அமெரிக்கா தேசங்களிலேயே கல்வியிற்றேர்ந்த அநேக வெள்ளைக்காரர்களால் கண்டித்துத் தூஷித்துக் கைவிடப்பட்டு முற்றிலுமழிந்து போகிறதாயிருக்கிறது. கிரிஸ்துமதம் இந்துக்களுக்குப் பொருந்தவே பொருந்தாது இது தவிர, அயல்தேசத்து மதம் வேறெதுவும் இங்கே இப்பொழுது பரவும் ஆத்மவியாதிக்கு ஔ

டைதமர்காது. வேறே எது தகுந்ததென்றால், உங்கள் சமஸ
கிருத வேதந்தான். அதை நீங்கள் பழையகாலத்து ஆரியர்
களைப்போல் கனம்பண்ணவேண்டும்; ஆனால் அதின் பொரு
ளையறியாது குருட்டுத்தனமாய்க் கனஞ்செய்தால் போதாது;
அதை நன்றாய் அப்யஸித்து அதிலுள்ள சிலாக்கியங்களை யு
ணர்ந்து நீங்கள் பூஜித்தல் நலம். வேதமானது மஹா புத்தி
மான்களுக்கும், ஞானிகளுக்குமாத்திரம் பொருள் படும்படி
யான நடையில் எழுதப்பட்டிருக்கிறது. அதில் வெளிக்குத்
தோன்றுகிற அர்த்தமொன்று, சரியான உள்ளர்த்தம் வேறு,
இதறியாமல், அதின் வெளியர்த்தமாகிய தப்பர்த்தத்தை மாத்
திரந் தெரிந்து கொண்டதினால்தான், உங்களிலநேகர் அவிசு
வாசிகளாய்விட்டார்கள். ஆனதுபற்றி, இக்காலத்து இந்து
க்களுக்கு வேதத்தின் இரகஸ்யார்த்தத்தைப் போதிப்பதவசி
யம். அப்படிச்செய்தால், அவர்கள் அவ்வளவுபூர்வகாலத்தி
லேயே தங்கள் தேசத்தில் கல்விசாஸ்திரங்களவ்வளவு நன்
றாய்க் கற்றறியபட்டனவென்று முழுநிச்சயங்கொண்டு, வெ
ள்ளைக் காரசாத்திரிகளுடைய சொல்லின்பேரில், புஸதகங்க
ளிலெல்லாம் மஹா சிறந்ததாகிய வேதத்தைத் தாங்கள் கேவ
லமாயெண்ணித் தூர எறியக் காரணமில்லையென்று காண்பா
ர்கள். வேதசாஸ்திரங்களை ஆதாரமாகக்கொண்டுண்டாகும்
இந்துதேசத்து நாகரீகமானது பாறையிற் கட்டப்பட்ட ஒரு
பலமான கோட்டைக்குச் சமம். ஆனால் வெள்ளைக்காரரு
டைய கல்வி, மார்க்கம்முதலியவைகளுக்குப் பொருந்தியதா
யுண்டாகும் இத்தேசத்து நாகரீகமானது, மணலிற் கட்டப்
பட்ட ஒருவீடுபோலுடனே சாய்ந்து விழுந்து பொடியும்.
ஆகையால் யாரெல்லாருமிப்போது இத்தேசத்திலுண்டாகும்
நாகரீகமானது முற்காலத்தைப்போ லிருக்கச்செய்யப் பிர
யாசையெடுக்கிறார்களோ, அவர்கள் இந்தியாவுக்கு உண்மை

யான இஷ்டர்கள்; யாரெல்லாரும் வேறுவிதமாய் நடக்கிறார்களோ, அவர்கள் அதற்கு விரோதிகள். இங்கிலீஷ் படித்த இந்துக்களுக்குள் அநேகர் ஐரோப்பியருடைய உடை, நடைபாவனைகளையும், துன்மார்க்கங்களையும் அநுசரிப்பதைப் பார்ப்பதினா லெனக்குண்டாகும விசனங்கொஞ்சமல்ல. இத்துன்மார்க்கங்களில், மதுபானம் முக்கியமானது. மேலும் உத்தியோகம் அல்லது மேன்மை பெறவேண்டுமென்ற வெண்ணத்துடன், தாங்கள் ஐரோப்பியர்களைக் காணும்பொழுதெல்லாம் தலைவணங்கி முழங்காற் படியிட்டு இச்சகம் பேசுகின்ற இந்துக்கள் அநேகரை நான்செல்லுமிடமெல்லாங் காண்கிறேன். இங்கிலீஷ்காரரைப்போல மஹா ஆண்மையும், சுயாதீனப்பிரியமும், தன்மரியாதையுமுள்ள ஒரு ஜாதியார், மற்றொரு தேசத்தார் அவர்களுக்குரிய மேன்மைமுதலியவற்றை விட்டுவிட்டுத் தங்களை வணங்கும்போது, அவர்களைக் கேவலமா யெண்ணுவார்களென்று இம்மூடர் ஒருக்காலும் நினைக்கிறார்களில்லை. இச்சிற்றறிவாளர் எவ்வளவாய்த் துதித்து, வணங்கி முகஸ்துதி செய்தபோதிலும், அவர்கள் மனதுக்குள் மறைத்துவைத்திருக்கும் கொடூரமான பகையையும், பட்டப்பெயர், கெண்ணிய முதலியவைகளை யடையவேண்டுமென்ற இழிவான வெண்ணங்களையும், வெள்ளைக்காரர் அறிந்துக்கொள்வார்கள். இந்தியா தேசமானதுதான் திரும்பப் பழைய மஹத்துவத்தையடைய இச்சித்தால முதலாவது, இந்துக்கள் தங்கள் கெண்ணியங்களைக் காப்பாற்றிக்கொள்வதுதான் சரியான புருஷத்துவமென்றறிவது அவசியம். இரண்டாவது, அவர்கள் கவனிக்கவேண்டியது சன்மார்க்கவிஷயம். இந்துக்கள் தாங்கள் வாக்குத்தத்தங்களைச் சத்தியமாய் நிறைவேற்றிக்கொண்டிருந்த காலம் ஒன்றிருந்தது. முப்பது வருஷங்களுக்குமுன் லக்ஷம் ரூபாயைக்கூட ஒரு இந்

றுக் காசுக்கடைக்காரனிடத்தில் இரசீதன்னியில் நம்பிக்கை யாய்க் கொடுத்துவைக்கலாம்; ஒரு பைசாக்கூட மோசம்போகாது" என்று இங்கிலீஷ் துரைகளிலநேகர் என்னிடத்திற் பலமுறை சொல்லியிருக்கிறார்கள். இப்போதப்படிச்செய்யலாமா? கூடவேகூடாது. ஏனெனில், இந்துக்களுக்குள், சொற்ப பேர்கள் தவிர மற்ற யாவரும் வஞ்சித்தல் கள்ளச் சத்தியம்பண்ணுதல், பொய்ப் பத்திரஞ் சிருஷ்டித்தல் போன்ற கொடிய செய்கைகளைப் பகிரங்கமாயும், பயவெட்கமன்னியிலுஞ் செய்யத் துணிந்துவிட்டார்கள். ஆரியாவர்த்தத்தின் உண்மையான இஷ்டர்களிலநேகர் இவைகளையெல்லாமென்னிடத்தில் ஒப்புக்கொண்டு, இந்தேசத்தில் சகல காரியங்களுஞ் சீக்கிரங் கெட்டுப்போய்விடுமென்று மஹா வியாகுலத்துடன் சொல்லியிருக்கிறார்கள். வட இந்தியாவிலெங்கும் பார்த்தால் உண்மையாய்ச் சுதேசாபிமானமுள்ள வீரர் நாலைந்து பெயர்கள்கூட இராரொன்றும். ஆகையாலித்தேசமொருநாளுக் முன்னுக்கு வராதென்றுஞ் சிலர் சொன்னார்கள். ஆனால் நான்கொண்ட அபிப்பிராய மிதல்ல. இதற்குமுன்நான் செய்தபிரசங்கங்களிலெல்லா மித்தேசம்மறுபடியும் பழைய நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவரப்படலா மென்பதாகச்சொல்லிவந்தது, உங்களிற் சிலருடைய ஞாபகத்துக்கு வரலாம். மற்றவர்க ளெப்படிச்சொன்னாலும், நான் எனக்குத் தோன்றுவதை மறைக்கப் பிரியப்படேன்; ஏனெனில், நான் உங்கள் நாட்டில் உங்களுடன் வாசஞ்செய்து கடைசியில் இங்கேயே மரணமடைய விரும்புகிறேன். இந்தேச மிக்காலத்தில் முழுது மாறிவிட்டது; இந்தியா பழைய காலத்தில், (1) ஆரியகாண்டத்துக்குரிய லெக்ஷணங்கள் யாவற்றையும் பொருந்தியதாயும்; (2) சமுசாரிகள் கிருஷிசெய்ய வந்ததுபோக, அதிக மீதியான தரிசு நிலத்தை யுடைத்தாய்ந்தாயும்; (3) அதிக சாரம்பொருந்திய பூமியாயு மிருந்தது. இப்பவோ அது

கைத்தொழில், பரிசி வர்த்தகமுதலிய எவையு நடத்தாமல், தனக்கு வஸ்திரங்களையும் தேகசுகமுதலியவற்றிற்குத் தேவையான அநேக பதார்த்தங்களையும் இங்கிலாண்டிலிருந்துபெற்றுக்கொள்ளுகின்றது. மேலும் அது இப்போது பாதிரிமுதலியோருக்கு வேட்டையாடுங் காடு. நீங்களுங்கள் ஆடை, நடத்தை, பேச்சு, எண்ணங்களிலெல்லாம் வெள்ளைக்காரர் மாதிரிகளைக் கைக்கொண்டுவிட்டீர்கள். ஜனத்தொகையு மட்டுக்கு மிஞ்சிப்பெருகி, நிலமுந்தீவிரமாய் சத்துக்கெட்டுக்கொண்டுவருகிறது. இப்படியிருந்தால், இந்நாட்டின் முடிவு எப்படியிருக்குமென்று சொல்வது வருத்தமா? செல்வத்திலும், செழிப்பிலும் இந்தியாவைவிட அநேக மடங்குயர்ந்திருக்கும் பிரான்ஸ், இங்கிலாண்டுமுதலிய தேசங்களில் ஒரு சதுரமயிலுக்குச் சராசரி-200-ஆட்களுக்குள்ளாக வஸிக்கும்பொழுதே, அத்தேசங்களின் ஜனங்கள் அவைகளின் விளைச்சல் பேர்துமானபடி ஆகாரத்துக்குக் காணாமல், அநேகர் உழைத்துக் கஷ்டப்பட்டு வயிறுகழிக்கவும் இன்னு மநேகர் அந்நிய தேசங்களிற் குடிபுகவும் வேண்டியிருந்தால் இத்தேசத்தின் கெதியென்ன? பிரிட்டிஷ் இந்தியாவில் ஒரு சதுரமயிலுக்கு -243-பேர்களும், வட இந்தியாவிற் சிலவிடங்களில்-680-ஆட்களுமிருக்கிறார்கள். இந்தக் கூட்டமிருந்தால், சாகுபடி செய்யக்கூடிய நிலங்களும், அவைகளின் விளைச்சல்களும், அவர்களுக்குக் காணுமா? காணாது. அப்படியெனில், முடிவு எவ்விதமாயிருக்கும்? பஞ்சமும் நோயும் அடிக்கடி நேரிட்டு ஜனங்களைக் கோடிகோடியாய்க் கொன்றுகொண்டிருக்கும் உங்களிலநேகர் இங்கிலீஷை அப்பியஸித்துப் பெரிய பரீக்ஷைகளிற் கெலித்து கர்வங்கொண்டு கலுக்கும் பிலுக்குமாயிருந்தும், யாருமறியவொண்ணாத விதியின் பயன் இப்படித்தானிருக்கின்றது.

வருங்காலம்:-

மேலே சொல்லியவாறெல்லா மிருக்க, இந்தியாவந்த நிலைமைக்கு வருமென்று சொல்லக்கூடியவர் எவர்? பூபோமகிமையால் ஆத்மலோகத்துக்குள் பிரவேசித்து இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலமென்ற காலவித்தியாசங்களைப் போக்கி, சகலத்தையுமொரே நிகழ்காலமாக்கித், திரிகாலவர்த்தமானங்களையுஞ் சொல்லக்கூடிய முனிஸ்வரர்கள். ஆனலிப்போது சரியான முனிகள் கொஞ்சந்தான்; அவர்களும் நாளுக்குநாள் நமது திருஷ்டியைவிட்டு விலகி மறைந்துகொள்ளுகிறார்கள். ஆகையால் ஞானதிர்ஷ்டியினுதவி நமக்கில்லாவிடினும், நாமதை ஒருவாறு நிதானிக்கலாம். ஜனங்களின் விதிவசங்களை யுண்டாக்கி நடத்தும் ஓர் பிரமாணம் பிரபஞ்சமெங்கும் வியாபித்திருக்கிறது, அதின்பிரகாரம் அவர்களுடைய வாழ்வுந் தாழ்வுஞ் சக்கரம்போல மேலுங்கீழுமாய் மாறிமாறியுருளும் உங்கள் தேசம் மஹா கேவலமான ஸ்திதியிலிருந்து தன் பூர்வ உன்னத ஸ்தானத்துக்கு உயர்த்துவக்கிவிட்டதாய் எனக்குறுதியான நம்பிக்கைபிறக்கின்றது. ஒரு நாட்டார் எவ்வளவு சிறப்பையும், வல்லமையையும் ஒருகாலத்திலுடைத்தாயிருந்தாலும், அவர்கள் சொந்த இயற்கையான சக்திதளர்ந்திருந்தால், திரும்ப ஒருக்காலு முன்மகிமையையடையார்; அது உறுதியாயிருக்குமாகில் அவர்களதைத் திரும்பச் சேர்வது திண்ணம், இவ்விரண்டு வகுப்புகளில் இந்தியாவை நாமெதோடு சேர்க்கலாம்? பிந்தியதோடு. இந்நாளையில், இந்துக்களுக்குள் புத்திமான்கள் கல்வியிற் றேர்வதற்குரியமார்க்கங்களை யுடைத்தாயிருப்பதுமன்றி, இங்கிலீஷ்காரரால் மந்திரித்தொழில் நன்குய்ப் பயிற்றுவிக்கவும்படுகிறார்கள். பழையகாலத் ஆரியர் பூமியிலுள்ள சாஸ்திரிகளுக்கெல்லாம்அரசார

யிருந்ததுபோல, அவர்கள் சந்ததியாராகிய நீங்களும் காலாந்வர்த்தியில் உலகத்தாருக்குள் அரிதான திறமையுடைய மந்திரிகளாவீர்கள். பல காரணங்களையிட்டு இப்போது பெரிய சர்க்கார் அலுவல்கள் இந்துக்களுக்குக் கொடுக்கப்படும் போற் காண்கிறது. அவர்களுக்குள் புதிதாயுண்டாக்கப்போகிற நாகரீகத்துக் கொருவேளை யிதுதானே ஆரம்பகாலமாயிருக்கலாம். கல்வி ஜனங்களுக்குள் பெருகப் பெருக, அவர்கள் கஷ்டங்களும் நீங்கிக்கொண்டுவரும். இங்கே யிப்போது பரவியிருக்கும் சமாதானமும், ஏற்பாடுகளும் இனி நிலைத்திருக்குமாகில், ஜனங்களை யொருவரோடொருவர் சேரவொட்டாமற் செய்கிற தடைகள் எடுபட்டுப்போகும்: பஞ்சாப் தேசம் திருவாங்கூரிலிருந்தும், கட்ச் தேசம் பெங்காளத்திலிருந்தும் எவ்வளவு தூரங்களிலிருந்தாலும், அவைகளிலிருக்கும் ஜனங்கள் தாங்களெல்லோரும் ஒருவருக்கொருவர் சகோதரர்களென்றறியத் துவக்கிவிட்டார்கள். இத்தேசத்திலுள்ள-24-கோடி யாட்களுக்கும் இந்தத் தீர்மான முண்டாகும்பொழுதுதான், இந்தியா சிலாக்கியம் பெறும். என்றைக்குக் கலைகளிலும், கைத்தொழில்களிலு மிக்காலத்தி லுண்டாயிருக்கும் விர்த்தியோடு ஜனங்களுக்கு ஏராளமான வேலைகள் கிடைக்குமோ; என்றைக்குப் பாட்சாலைகள் ஆவலுள்ள மாணாக்கரால் நிறையப்படுமோ; என்றைக்கு வெகுநாளாய் மங்கியிருக்கும் வேதஞானமும் ஒளிவீசிப் பிரகாசிக்குமோ; என்றைக்கு ஆத்மநம்பிக்கையை யழிக்கிறதும், சுதேசவழக்கம், ஆசாரமுதலியவற்றை விடச்செய்கிறதுமாகிய அவிசுவாசத்திலும், நாஸ்திக மதத்திலும், அறைகுறையான சாஸ்திரங்களிலும், விருப்பமுடைய இந்துக்கள் யாவரும் வேதசாஸ்திரங்களை ஸ்துதித்துப் பூஜிக்கிறார்களோ; என்றைக்கு சம்ஸ்கிருத போதகர்கள் தகுந்தபடி சம்பளங்கொடுக்கப்பட்டுக்கொண்

டாடப்படுவோர்களோ; என்றைக்கு அதிக தூரங்களிலிருக்கும் ஜில்லாக்கள், புகைவண்டி தந்தித்தபால் மூலமா யிணைக்கப்படுமோ; என்றைக்கு இத்தேசத்தில் உலோக விளைச்சலும் கிருஷியும் பூரணமாய் விர்த்திசெய்யப்படுமோ, என்றைக்கு அநந்த ஜில்லாக்களிலிருக்கும் ஜனங்களுக்கு அந்தந்தவிடங்களிலுண்டாம் விளைச்சலும், தொழில்களும் சமமாகுமோ; என்றைக்கு உண்மையாய்ப் பார்க்கவொட்டாமலிவ்வளவுகாலமாய்க் கட்டப்பட்டிருக்கும் உங்களது ஆத்மக்கண்கள் திறக்கப்பட்டு அஞ்ஞான விருள் நீங்குமோ; அன்றைக்குத்தான் பூர்வகாலத்து ஆரியர்களுடைய நாகரீகம் முற்றிலுந் திரும்பியுண்டாகிவிட்டதாகும்; அன்றைக்குத்தான் உலகிலுள்ளோர் யாரும் ஆச்சரியமடைந்து வணங்கும்படியான அவ்வளவு ஞானமும் நன்மையும் பொருந்திய ஆரியர் இந்தஆரியாவர்தத்தில் தோன்றுவார்கள். அப்பேர்ப்பட்ட மஹத்துவமுடையாரை நாமெப்போது பார்ப்போம்? இந்தியாவானது இப்பூமியில் தானிருக்கவேண்டிய உன்னத ஸ்தானத்தை யெப்போதடையும்? அப்பா! எப்போது! விதிவசமெவருக்குந் தெரியாது. ஒருக்கால் அது ஒரு நூற்றுண்டல்லது பல நூற்றுண்டுகளுக்குப் பின்புதானிருக்கலாம், ஏனெனில், தேசத்தார்களுடைய விதிவசத்துக்குத் தக்கதாக அவரவர்களுக்கு நேரிடும் வாழ்வாவது, தாழ்வாவது, இகழ்ச்சியாவது, புகழ்ச்சியாவது, விரைவாய் வந்து விரைவாய்ப்போகக்கூடியவைகளல்ல. தற்காலத்தைப்பற்றிமாத்திரந் சிந்தித்தல் போதும்; காரணந் தற்காலத்திலிருந்தே வருங்காலம் ஜனிக்கிறது. நாம் செய்கிற காரியங்களும், செய்யாமல் விடுகிற கருமங்களுமே யினி நாமநுபவிக்கும் சுகதுக்கங்களுக்குக் காரணங்களாயிருக்கும். நாம் காரியங்களைத் தடங்கி நடத்தமாத்திரஞ் செய்யலாம்; அனுபவங்களின் முடிவுகள் நமது கைகளுள்

ளாகப்பட்டவையல்ல. ஜனங்களே! இந்த வுண்மையை மனதில் வையுங்கள் நீங்கள் மனிதன் இறந்தபின் அவன் ஆத்மா ஜீவித்திருக்குமென்று நம்பினாலுமே; இந்துக்களைப்போல் கருமத்தில் நம்பினாலுமே; அல்லது பௌத்தர்களைப்போல ஸ்கந்தத்தில் நம்பினாலுமே; உங்கள் நம்பிக்கை யெப்படியிருந்தாலுமே; உங்களுடைய கருமங்களின் பொறுப்பு உங்களைவிட்டொருக்காலு மொழியாதென்று நினையுங்கள். நீங்கள் செய்கிற நல்ல அல்லது கெட்ட செய்கைகளுக்கும், நீங்கள் செய்யவேண்டியிருந்தும் செய்யாமல் விடுகிற காரியங்களுக்கும், "உத்தரவாதவிதி" யின்பிரகாரம் நீங்களே ஜவாப் கொடுக்கவேண்டியதாயிருக்கும். கடைசியாக இப்போது நீங்கள் கற்கவேண்டிய படிப்பினை யென்னவென்றால், (1) இத்தேசத்திலுள்ள ஒவ்வொரு தாயாரும் தன்குழந்தைக்கு முந்தியகாலங்களில் ஆரியாவர்த்தாவுக் குண்டாயிருந்த மகிமைமுதலியவைகளைப் பலமுறை யெடுத்துச்சொல்ல, அதைச் சுதேசாபிமானமுள்ளதாகச் செய்யவேண்டியது; (2) ஒவ்வொரு இந்துவும் தன் முன்னோர்களின் புத்திநுட்பம் ஞானம், திறமைகளைப்பற்றிய ஞாபகத்தை மறவாமல் எப்பொழுதுந் தெளிவாய் வைத்திருக்கவேண்டியது; (3) உங்களிலொவ்வொருவரும் ஆரியன் என்ற நாமத்தை உடைத்தாயிருக்கச் சகல விதத்திலும் பாத்திரவானாயிருக்கும்படி தன்னாற் கூடியதைச் செய்யவேண்டியது.

☞ ஆரியர்களே! கேட்டீர்களா இந்தத் துரை நம்முடைய தேசத்துத் திரிகால ஸ்திதிகளைப்பற்றிப் புகலும் வசனங்களை! என்ன அதிசயம் இது! நல்லது, வெள்ளைக்காரர் தேசத்தில் ஜெனித்து, வெள்ளைக்காரர் தர்க்கசாஸ்திரங்களில் பண்டிதரும், ஜெகத்தெங்கும் பிரபல்ய மடைந்திருப்பவருமாகிய இந்தத்துரை இப்படிப் பிரலாபிப்பதற்குக் காரணம்! ஆலோசியுங்கள்; விசாரியுங்கள்.